7th February 1959]

தேவைப்படுகிறது. அதனால் அளவு ஓரளவு குறைக்கப்பட்டிருக்கிறது. கனம் முதல் அமைச்சர் அவர்கள் சொல்வது போல், நம்முடைய ராஜ்யத்திலேயே நார்ப் பட்டு நூல் தயாரிப்பதற்கான ஒரு தொழிற்சாலை புதிதாக ஆரம்பிக்க இருக்கிறது. அது வந்துவிட்டால் நம்முடைய குறை தீர்ந்துவிடும் என்று நினைக்கிறேன்.

**Sri K. SATTANATHA KARAYALAR** : இப்படி லைசென்ஸ் வழங்கப் படுவதிலே, கூட்டுறவு சங்கத்திற்கு முதல் இடம் கொடுக்க சிபார்சு செய்வார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அப்படித்தான் செய்யப்பட்டிருக்கிறது. சென்னை ராஜ்ய கூட்டுறவு சங்கத்திற்கு சுமார் எட்டு லட்ச ரூபாய் பொறுமான ஆர்ட் ஸில்க் தருவித்துக் கொடுத்து, அதை கூட்டுறவு சங்கங்களுக்கு விநியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**Sri A. MARIAPPAN** : மற்ற மாகாணங்களில், தேவையை விட அதிகமாக வியாபாரிகள் கோரியிருந்தாலும், அதே அளவு மாகாண சர்க்கார்கள் அவர்களுக்குச் சிபார்சு செய்கிறார்கள். ஆனால், நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையிலும், இவர்கள் மிகவும் கடுமையாகக் குறைத்து சிபார்சு செய்ததனால், மத்திய சர்க்கார் குறைவாகத் தான் லைசென்ஸ் கொடுக்கிறார்கள் என்பது வாஸ்தவமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : சென்னை ராஜ்ய சர்க்கார் நியாயமாக நடக்கிறது.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : நம்முடைய சென்னை மாகாணத்திலே நார்ப்பட்டை விநியோகிப்பதற்கு பம்பாய், கல்கத்தாவிலே விநியோகஸ்தர்கள் இருக்கிறபடியால், நம்முடைய தேவைக்குத் தகுந்தபடி அவர்கள் கொடுக்க முடியாத நிலைமை இருக்கிறது. நம்முடைய மாகாணத்திலே எந்த எந்த ஜில்லாவிலே இது தேவையோ அந்தந்த ஜில்லாவிலேயே விநியோகஸ்தர்களை ஏற்படுத்த அரசாங்கம் ஏதாவது யோசித்து முடிவு செய்வார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : நமது ராஜ்யத்திற்குத் தேவையான நூலைக் கொடுக்கவேண்டும் என்று தான் நாம் இப்பொழுது சிபார்சு செய்திருக்கிறோம். அதற்கான முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறோம். இதை விநியோகிப்பவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பது முக்கியம் இல்லை. நம்முடைய ராஜ்யத்திலே தேவையான நூலைக் கொடுப்பதற்கு ஜாயிண்ட் கண்ட்ரோலருக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்று இப்பொழுது சிபார்சு செய்திருக்கிறோம்.

*Bus route cases*

* 91 *Q*.—Sri K. RAMACHANDRAN (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have issued any directions to the State Transport Authority and the Regional Transport Authorities to give out their findings in bus route cases within a specific period?

The Hon. Sri V. RAMAIAH : No, Sir.

**Sri K. RAMACHANDRAN** : பஸ் ரூட்டுகள் சாங்ஷன் ஆனாலுங் கூட, பஸ் போக. ஆரம்பிப்பதற்கு குறைந்தது மூன்று நான்கு மாதங்கள் ஆகின்றன. அப்படி யில்லாமல், பஸ் ரூட் சாங்ஷன் ஆனவுடனேயே பஸ்களை விடுவதற்கு அரசாங்கம் உத்தரவிடுவார்களா ?

[7th February 1959

**THE HON. STI V. RAMAIAH :** பஸ் ரூட் சாங்ஷன் ஆனவுடனே பல நிபந்தனைகளை அனுஷ்டிக்க வேண்டும். சட்டங்களை அனுஷ்டிக்க வேண்டும். அதனால்தான் காலதாமதம் ஏற்படுகிறது. இந்தக் கேள்வியைப் பொறுத்த வரையில், பஸ் ரூட்கள் கொடுக்கவேண்டுமென்று ஆர்.டி.ஏ. தீர்மானம் செய்தால், அதைக் காலதாமதம் செய்யாமல் உடனடியாக உத்தரவு பிறப்பிக்கவேண்டுமென்ற கேள்வி தனிப்பட்ட கேள்வி.

**SRI A. VEDARATHNAM :** பொது ஜன கோரிக்கையின் பேரில் ஒரு ரூட் சாங்ஷன் ஆனவுடனே, அதை ஒரு பஸ் கம்பெனிக்காரருக்குக் கொடுத்தால், உடனே மற்றவர்கள் அதன் பேரில் வழக்குத் தொடர்ந்து, அந்த ரூட்டில் பஸ் வர முடியாதபடி தடை செய்து விடுகிறார்கள். அவர்களுக்குப் பண வசதி இருக்கிற காரணத்தால், வியாஜ்ஜியத்தை ரொம்ப காலம் நடத்திக்கொண்டேயிருக்கிறார்கள். அதனால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். அப்படியில்லாமல், ரூட் சாங்ஷன் ஆனவுடனே, எந்த விவகாரம் இருந்தபோதிலும், அந்த பஸ் தடைப்படாமல் ஓடுவதற்கான முயற்சியை அரசாங்கம் செய்ய முன் வருமா ?

**THE HON. SRI V. RAMAIAH :** இன்றைக்கிருக்கும் சட்டப்படி பஸ் ரூட் சாங்ஷன் ஆனவுடனே ஆர்.டி.ஏ. இடமிருந்து ரூட் வாங்கினவுடனே 60 தினங்களுக்குள்ளே பஸ் போடவேண்டும் ; அப்படிப் போட்டாலும், பாதிக்கப்பட்டவர்கள் என்று நினைக்கக் கூடிய மற்ற பஸ் ஆபரேட்டர்கள், அந்த பஸ்ஸைப் போகவிடாமல் என்ன தடை செய்யவேண்டுமோ அதைச் செய்வதற்கு ஹைகோர்ட், சுப்ரிம் கோர்ட் வரையில் போய்க் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் நல்ல எண்ணம் கொண்டு இதுபோன்று தடை செய்யாமல் இருந்தால் நன்றாக இருக்கும். அரசாங்கம் இன்று இருக்கும் நிலையில் எதும் தடை செய்து உத்தரவு போட முடியாது.

**SRI S. LAZAR :** இதுபோன்ற தடைகள் ஏற்படாத வண்ணம் சட்டத்தைத் திருத்தியமைப்பதற்கான ஒரு வேலையை சர்க்கார் எடுத்துக் கொள்வார்களா ?

**THE HON. SRI V. RAMAIAH :** இன்றைக்கிருக்கும் சட்ட அமைப்புப்படி, யார் தொழில் நடத்தவேண்டுமென்று முன் வருகிறார்களோ, அவர்கள் தொழில் நடத்தலாம் என்ற ரீதியில் போக்குவரத்து இலாகா சட்ட திட்டங்கள் அமைந்திருக்கின்றன. ஆனால், மற்றவர்கள், பாதிக்கப்பட்டவர்கள், ஹைகோர்ட், சுப்ரீம் கோர்ட் போவதைத்தடை செய்யக் கூடிய முறையிலே சட்டம் போட முடியாது.

**SRI K. ANBAZHAGAN :** பஸ் ஒவ்வொரு வழியிலும் செல்வதற்கு அனுமதிக்கப்பட்டதற்குப் பின்னர் அந்த அனுமதியுத்தரவு பயன்படாத அளவுக்கு பெரிய பஸ் முதலாளிகள், அல்லது வசதி பெற்றவர்கள், நீதி மன்றத்தின் மூலம் குறுக்கீடு செய்யக்கூடிய வாய்ப்பு உள்ளதைத் தடுப்பதற்கு அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுக்குமா ?

**THE HON. SRI V. RAMAIAH :** இந்தத் தடை செய்வது பெரிய பஸ் முதலாளிகள் மட்டுமல்ல. சாதாரண ஒரு பஸ், இரண்டு பஸ் வைத்துக்கொண்டிருப்பவர்களும் இந்தத் தடை செய்வதற்கு முன் வந்திருக்கிறார்கள். ஒரு ரூட்டில் மற்றவர்களும் புகுந்துகொண்டால் அவர்களுடைய வருமானம் பாதிக்கப்படும் என்று நினைப்பது சகஜமே. ஆகையால், பஸ் ரூட்டுகள் ஒரே கம்பெனிக்கோ தனிப்பட்டவர்களுக்கோ பூராவும் சொந்தமாக இருக்கக்கூடாது, மற்றவர்களும் அதில் வரவேண்டும் என்ற கொள்கைப்படி, இப்பொழுது பஸ் முதலாளிகளுக்கும் மற்றவர்களுக்கும் அதில் இடம் கொடுத்து வருகிறோம். அதனால், இந்தக் குறை நீண்ட காலத்திற்கு இருக்காது என்று நான் நம்புகிறேன்.

7th February 1959]

**Sri R. SRINIVASA IYER** : சர்க்கார் எடுக்கும் நடவடிக்கைகளிலும், சில நடவடிக்கைகளைப்பற்றி இன்ஜங்ஷன் உத்தரவு கோர்ட்டில் கூட கொடுக்கக் கூடாது என்று சட்டம் இருக்கிறது. அந்த முறையிலே பஸ் ரூட் கொடுத்தால், முடிவான கோர்ட் தீர்மானத்திற்கு உட்பட்டு, அந்த பஸ் ரூட் நடந்துதான் ஆகவேண்டும், தடையுத்தரவு போடக்கூடாது என்று ஒரு மசோதா ஏன் சர்க்கார் கொண்டுவரக்கூடாது என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri V. RAMAIAH** : இந்த பஸ் ரூட் கொடுக்கும் விஷயத்திலும், பஸ் நடத்தக்கூடிய முறையைப் பொறுத்தவரையிலும் இது போன்ற சிக்கல்கள் இருக்கக் கூடாது என்று எனக்கும் அரசாங்கத்திற்கும் ஆசை இருந்தாலுங்கூட, இது தொழில் நடத்தக் கூடிய முறையிலே, இந்த பஸ் போக்குவரத்து நடத்தி வருகிறார்கள். ஆகையால், தொழிலை பாதிக்கக்கூடிய முறையிலோ, அதில் புகுந்து கொள்ளக்கூடிய மற்றவர்களைத் தடை செய்யக் கூடிய முறையில் சட்டம் செய்ய முடியாது.

**Sri S. LAZAR** : ஸார், இப்பொழுது இருக்கக்கூடிய Motor Vechicles Act and the Motor Vehicles Rules இவைகளை அனுசரித்து நூற்றுக் கணக்கான கேஸ்கள் ஹைகோர்ட், சுப்ரீம் கோர்ட் வரை சென்று தீர்ப்புக்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. அந்தத் தீர்ப்புகளின் அடிப்படையில் இப்பொழுது இருக்கும் சட்டங்களையும், விதிகளையும் திருத்த அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : நான் ஆரம்பத்தில் சொன்னபடி எந்த ஒரு பிரச்சனையையும் எடுத்துக்கொண்டு ஹைகோர்ட்டுக்கோ, சுப்ரீம் கோர்ட்டுக்கோ போவதை அரசாங்கம் தடை செய்ய முடியாது. இருந்தாலும் இந்தச் சட்டங்களில் உள்ள கஷ்டங்களைப் பரிசீலனை செய்து நிவர்த்தி செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது.

**Sri K. PERIANNAN** : சபாநாயகர் அவர்களே, நமது அமைச்சர் அவர்கள் யார் வேண்டுமானாலும் பஸ் ரூட்டுகளை எடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். ஆனால் ஹரிஜனங்கள் பஸ் ரூட்டுகளை எடுக்க பல இடைஞ்சல்கள் இருக்கின்றன. தடைகள் பல ஏற்படுகின்றன. ஆகவே ஹரிஜனங்களுக்குப் பஸ் ரூட்டுகள் கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : பஸ் ரூட்டுகள் விநியோகிக்கும்படி யார் வேண்டுமானாலும் கோரிக்கை போடலாம். அரசாங்கத்தைப் பொறுத்தவரை இது ஹரிஜனங்களுக்குக் கிடைக்கவேண்டும், தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கிடைக்க வேண்டும் என்று உத்தரவு போட முடியாது.

**Sri S. RAMAKRISHNA THEVAR** : நல்லெண்ணத்துடன் தான் பஸ் ரூட்டுகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. தனிப்பட்ட முறையில் ஒருவருக்குப் பஸ் ரூட்டைக் கொடுத்தால் அவர்களால் பெரிய பஸ் கம்பெனியை நடத்திக் கொண்டிருப்பவர்களுடன் போட்டி போட முடியவில்லை. அது சிறு பஸ் முதலாளிகளைப் பாதிக்கிறது. அதனால் பல இன்னல்கள் விளைகின்றன. இதைத் தவிர்க்க சட்டத்தைத் தகுந்தபடி திருத்தம் செய்ய வேண்டும். இதைச் செய்ய அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri V. RAMAIAH** : அரசாங்கத்தை பொருத்தவரை எல்லோருக்குமே சம சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறோம். சட்ட அமைப்பு காரணமாக மட்டும் இன்னல்கள் ஏற்படவில்லை. அதில் இருக்கும் மற்றச் சிரமங்களையும் கனம் அங்கத்தினர் அவர்கள் நன்றாகத் தெரிந்துகொண்டு சட்டத்தை எப்படித் திருத்த வேண்டுமென்று கூறினால் ஆலோசனை செய்கிறேன்.

**Sri K. VINAYAKAM** : In order to avoid all these complications and difficulties that arise in the working of this Act, will the Government think of the possibility of entirely nationalising bus routes in our State or in the alternative will the Government

come forward to auction the routes and give them to the highest bidder provided they stick to the regulation of not charging more than the maximum rate per mile fixed by the Government?

THE HON. SRI V. RAMAIAH : The two suggestions given by the hon. Member will not solve the present difficulties because there is keen competetion from every section of the people. Government are constantly reviewing the situation to find out what steps should be taken to minimise the difficulties which are experienced at present.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்தப் பஸ் ரூட்டுகளைப் பெறுவதற்கு பஞ்சாயத்து போர்டு எத்தனை தீர்மானங்கள் போட்டாலும் பர்மிட் கிடைப்பதுபெரும் முதலாளிகள் குறுக்கிட்டால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இந்தப் பெரிய பஸ் கம்பெனிகளின் உரிமையாளர்கள் தங்கள் லாபத்தைக் கருதி மற்றவர்களுக்குக் கொடுக்கப்படும் சிறு பஸ் ரூட்டுகளைத் தடை செய்கிறார்கள். ஆகவே இந்த பஸ் சர்வீசை சர்க்காரே எற்று நடத்த முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : அதிகப்படியாக பஸ் ரூட்டுகளைத் திறப்பதற்கும் அரசாங்கமே பஸ் ரூட்டுகளை எற்று நடத்துவதற்கும் சம்பந்தமே இல்லை. அதிகப்படியாக பஸ் ரூட்டுகளை அரசாங்கம் ஏற்படுத்த முன்வருவதைத் தடுப்பதற்குக் கூட எவ்வளவோ முயற்சிகள் நடக்கின்றன. அதைக் காட்டிலும் அதிகப்படியான முயற்சியுடன் பஸ் ரூட்களைத் திறப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொண்டு வருகிறது. நமது மாகாணத்தைப் பொருத்தவரை போக்குவரத்து வசதி நல்ல முறையில் இருந்தாலும் இன்னும் அதிகப்படுத்த வேண்டியது அவசியம்தான். அதை எதிர்ப்பவர்கள் இருக்கின்றார்களே என்று பார்க்கும்போது உண்மையில் நானே வருத்தமடைகிறேன்.

SRI D. S. AUTHIMOOLAM : நாம் சோஷலிஸ பாணி சர்க்கார் என்று சொல்லிக் கொள்வதால், 50 பஸ் பர்மிட்டுகளுக்கு மேல் ஒரு கம்பெனிக்குக் கொடுக்கக் கூடாது என்று விதியைத் திருத்த சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : பஸ் போக்குவரத்தைப் பொறுத்தவரை அது நல்ல முறையில் நடைபெற வேண்டுமென்பதுதான் என்னுடைய எண்ணம். உச்ச வரம்பை நிர்ணயிப்பது பற்றிப் பரிசீலனை செய்கிறேன்.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது "ட்ரெயின்கள்" எல்லாம் காலாகாலத்தில் வராத காரணத்தினால் பல எக்ஸ்பிரஸ் பஸ்களை விட அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : பஸ் போக்குவரத்தைப் பொருத்வரை எல்லா பஸ்களும் காலாகாலத்தில் வந்து கொண்டிருக்கின்றன. அதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக்கொண்டு வருகிறோம். ரயில் போக்குவரத்தை ஈடு செய்யும்படி அதிகமாக பஸ் விட வேண்டுமென்று பரிசீலனை செய்து மக்களுக்குச் சிரமம் இல்லாத முறையில் பஸ்களை அதிகப்படுத்திக் கொண்டு வருகிறோம்.

### *Fishermen Co-operative Societies in the Nanguneri taluk*

* 92 Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether the Fishermen Co-operative Societies in the Nanguneri taluk of the Tirunelveli district are brought under the Assistant Director of Fisheries, Kanyakumari district;